# காயல்பட்டினத்தின் வரலாற்றுச் சுருக்கமும் தலைமுறையும்

அல்ஹாஜ் R. S. அப்துல் லத்தீபு *M.A.*





# பொருளடக்கம்





# காயல்பட்டினத்தின்

# வரலாற்றுச் சுருக்கமும்-தலைமுறையும்



ஆசிரியர் :

அல்ஹாஜ் R. S. அப்துல் லத்தீபு, M.A.,



வெளியீடு :

சம்சுத்தீன் அப்பா பதிப்பகம்

36, அம்பல மரைக்காயர் தெரு,

காயல்பட்டினம்.



நூல் கிடைக்கும் இடம் :

முஹ்யத்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளி,

காயல்பட்டினம்.

4

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | KAYALPATINATHIN VARALARU SURUKAMUM THALAI MURAIYUM |
| Author | : | ALHAJ. R. S. ABDUL LATIFF M.A. 36. AMBALA MARAICAR STREET |
| Language | : | TAMIL |
| Date of Publication | : | SEPTEMBER 1998 |
| Edition | : | FIRST |
| Copy Right | : | AUTHOR |
| Size of the book | : | 22X14 CM |
| Type used for Text | : | 12pt |
| Number of pages | : | 50 |
| Publishers | : | SHAMSUDDEEN APPA PUBLISHERS KAYALPATNAM |
| Price | : | RUPEES TWENTY FIVE |
| Subject | : | HISTORY OF KAYALPATNAM |


## சமர்ப்பணம்

இந்நூலைக் காயல்பட்டினத்தில் பிறந்த, மறைந்த அனைத்து இறைநேச செல்வர்களுக்கும் காணிக்கையாக சமர்ப்பிக்கின்றோம்.



# முன்னுரை

அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

நஹ்மதுஹூவ நுஸல்லி அலா ரஸூலிஹில் கரீம்

அல்லாஹூ தஆலாவின் பேரருளாலும் அவனுடைய திருத்தூ-துவர் முஹம்மதுர் ரஸூல் (ஸல்) அவர்களின் நல்லாசியாலும் வலிமார்களின் துஆ பரக்கத்தாலும் இச் சிறிய நூல் வெளிவருகிறது. அல்ஹம்து லில்லாஹ்

காயல்பட்டினம் வரலாற்றை முழுமையாகவும் தெளிவாகவும் எடுத்து இயம்பும் ''காயல்பட்டினம்'' என்னும் நூலின் சுருக்கமே இந்நூல் காயல்பட்டினத்தில் இஸ்லாமியர்களின் முதல் குடியேற்றம் எப்பொழுது என்பதை தக்க சான்றுடன் இந்நூல் விளக்குகிறது. இஸ்லாத்தின் இரண்டாவது கலீபாவாகிய உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் இனிய இஸ்லாம் காயல் பட்டினத்தில் நுழைந்து விட்டது. ஹிஜ்ரி 21-ம் ஆண்டு (கி.பி. 642) மாலிக் இப்னு தீனார் தலைமையின் கீழ் வந்த அரபியர்களின் குழு ஒன்று சுமார் ஹிஜ்ரி 23-ம் ஆண்டில் காயல்பட்டினத்தில் கடற்கரை பள்ளி என்ற பெயரில் ஒரு அழகிய பள்ளியைக் கட்டி இஸ்லாத்தை பரப்பி உள்ளது. இப்பள்ளி இன்றைய கோஸ்மரை தர்காவுக்கு அண்மையில் அமைந்திருந்தது என்பது கல்வெட்டு குறிப்பு ஒன்றின் மூலம் அறிய முடிகிறது. தாஜீத்தீன் என்ற பெயரில் இஸ்லாத்தை தழுவிய சேர பெருமான் என்ற மன்னர் மாலிக் இப்னு தீனாருக்கு ஓர் அறிமுக கடிதம் கொடுத்து கேரளாவுக்கு அனுப்பினார் என்றும் கூறப்படுகிறது.

பேராசிரியர் டாக்டர் கா. அப்துல் கஃபூர் *M.A.D.Lit*, அவர்கள் ''காயல்பட்டினம்'' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையையும் இந்நூலில் இடம் பெறுகிறது. இந்நூல் வெளிவர துணைபுரிந்த அனைவருக்கும் எனது உள்ளம் கனிந்த நன்றியை தெரிவித்து கொள்கிறேன்,

காயல்பட்டினம்
9—4—1998

**ஆர்.எஸ். அப்துல்லத்தீபு**

# பதிப்புரை

*பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்*

இந்நூல் காயல்பட்டினத்தின் வரலாற்றைத் தெளிவாகவும், சுருக்கமாகவும் எடுத்து இயம்புகிறது. இவ்வூரில் வாழ்ந்த, வாழ்கின்ற மக்கள் எந்தெந்தத் தலைமுறைகளில் வருகிறார்கள் என்பதையும் விளக்கமாக எடுத்துக் கூறுகிறது. இந்தியாவின் முதல் பள்ளிவாசல் கேரள மாநிலத்திலுள்ள கொடுங்கநல்லூரில் இருக்கிறது. இப்பள்ளிவாசல் கி. பி. 642-ல் கட்டப்பட்டதாக தெரிகிறது. காயல்பட்டினத்திலுள்ள கடற்கரைப் பள்ளிவாசல் தமிழ்நாட்டின் முதல் பள்ளிவாசலாகச் சொல்லப்படுகிறது. இப்பள்ளிவாசல் சுமார் கி. பி. 644-ல் (ஹிஜ்ரி 23) கட்டப்பட்டதாக இந்நூல் மூலம் அறிய முடிகிறது.

இந்நூல் சிறப்பான முறையில் வெளிவர உதவிய அனைவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அனைத்துத் தரப்பினர்களும் இந்நூலைப் படித்துப் பயன்பெற அல்லாஹ் அருள் புரிவானாக ஆமீன்.

இவண்

**சம்சுத்தீன் அப்பா பதிப்பகத்தார்**



# அணிந்துரை

## பேராசிரியர் டாக்டர் K. அப்துல் கஃபூர் *M.A. D.Lit.,*

தென்னகத்தின் இஸ்லாமிய வரலாற்றில் சிறப்பானதோர் இடம்பெற்றுள்ள பழம்பதி காயல்பட்டினம். அருட் செல்வமும் பொருட் செல்வமும் இணைந்து சீரோடும் சிறப்போடும் இலங்கு கின்ற இவ்வூரில், இறைநேயச் செல்வர்களும், ஞானமா மேதை களும், திருமறை விரைவுரையாளர்களும், அறபுமொழி வித்தகர்களும், அருட்பெரும் புலவர்களும் வளமுற வாழ்ந்து வனப்பினைப் பெருக்கியுள்ளார்கள். இன்பத் தமிழில் இஸ்லாமிய மணம் பரப்பும் இனிய இலக்கியங்களில் சிறப்பானதோர் பகுதி இங்கு தோன்றியதாகும், அறபு மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் கூட வியந்து போற்றும் அளவுக்கு அரிய அறபு மொழி ஆக்கங்கள் இம்மண்ணில் மலர்ந்துள்ளன. மிகப்பழமையான இறை இல்லங்கள், மெய்ஞ்ஞான ஒளி பரப்பும் தர்காக்கள் இறை நேயர்களின் தர்காக்கள், அற நிலையங்கள், கல்வி நிறுவனங்கள், வரலாற்றுச் சின்னங்கள் பல இவ்வூரின் மாண்பினைப் பெருக்கி வருகின்றன.

கரயல்பட்டினத்தின் வரலாறு பற்றிச் சில நூல்கள் இது வரையில் வெளிவந்துள்ள போதிலும், இப்போது வெளிவந்துள்ள ''காயல்பட்டினம்'' என்ற நூல், காயல்பட்டின வரலாற்றிற்கு ஒரு கலங்கரை விளக்கமாகப் பரிணமிக்கின்றது. இந்நூலின் ஆசிரியர், அல்ஹாஜ் ஆர். எஸ். அப்துல் லத்திப் அவர்கள் பெரிதும் பராட்டுதற் குரியவர்கள் ஞான மேதைகளின் பரம்பரை யில் வந்தவர்கள் இஸ்லாமிய உலகின் பல நாடுகளுக்கும் பயணம் செய்து பயன் பெற்றவர்கள் நுண்மான் நுழைபுலம் மிக்கவர்கள்.

ஒரு நாட்டின்- ஓர் ஊரின்-வரலாற்றை உணர்ந்து கொள் வதற்குக் கல்வெட்டுகளும் மண்ணறை மீசான்களும் தக்க ஆதா ரங்களாக மிளிர்வன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு இந்நூலினை ஆக்கி அளித்துள்ளது மிகவும் சிறப்பிற்குரியதாகும் நூலாசிரியர் அவர்களின் ஆழ்ந்த ஞானமும், அயராத முயற்சியும் உயர்ந்த ஆற்றலும் இந்நூல் வழியாக வெளிப்படுகின்றன. இது

வரையில் பலருக்கும் தெரியாமலிருந்த உண்மைகள் பல இந்நூல் வழியாக வெளிவந்திருக்கக் காணலாம். கொற்கை, வகுதை பவித் திரமானிக்கப்பட்டினம் போன்ற தலைப்புகளின் கீழ் அமைந்துள்ள கருத்துக்கள், வரலாற்று ஆராய்ச்சியாளர்களுக்கு மிகவும் பயன ளிப்பவனவாகும்.

ஹிஜரீ மூன்றாம் நூற்றாண்டில் தொடக்கத்தில் முஸ்லிம் கள் காயல்பட்டினத்தில் குடியேறுவதற்கு முன்னரும் இஸ்லாத்தின் வருகைக்கு முன்னரும் மேனாட்டு வணிகத் தொடர்பு இப்பகுதி களில் இருந்துள்ள தென்பதை அகழ்ந்தெடுக்கப்பட்ட பொருட்கள் வெளிக்காட்டுகின்றன. ஆகவே இஸ்லாமிய வரலாற் றிற்கு மட்டுமன்றி, தமிழக வரலாற்றிற்கும், இந்திய வரலாற்றிற் கும் இந்நூலிலுள்ள கருத்துக்கள் மிகவும் பயன்படுவதாக இருக் கின்றன.. இவற்றை அடிப்படையாக கொண்டு ஆராய்ச்சியைத் தொடர்வோர் மேலும் பல உண்மைகளைக் கண்டு கொள்ள முடியும். பெரிய குத்பாப் பள்ளி கல்வெட்டுகள், காட்டுமகுதூம் வலியுல்லாஹ் தர்காக் கல்வெட்டுகள் முதலியனவும், கன்னித் தமிழ் வளர்த்த காயல் புலவர்களைப் பற்றிய குறிப்பும் மிகவும் பயனுள்ளதாக அமைந்துள்ளன.

மிகப் பயனுள்ள ஒரு பணியை நிறைவேற்றியுள்ள ஆசிரியர் அவர்கள் வரலாற்றாராய்ச்சியில் ஈடுபாடுள்ள அனைவரின் பாராட்டிற்கும் உரியவர்கள். அவர்களின் பணி தொடர்வதற்கு இறையருள் பெருகிட வாழ்த்துவோம்.

**K. அப்துல் கஃபூர்**

**தக்கலை.**
**7-10-1996**



# காயல்பட்டினத்தின் வரலாற்றுச் சுருக்கம்
## [BRIEF HISTORY OF KAYALPATNAM]

இவ்வூர் தூத்துக்குடி மாவட்டத்தில் திருச்செந்தூருக்கு வடக்கே நான்குமைல் தொலைவில்கடலோரமாக அமைந்துள்ளது அன்று காயல் எனவும், வ கு தை எனவும் காஹிரூர் எ ன வு ம் தென்காயல் எனவும் ப வி த் தி ர மாணிக்கப்பட்டினம் எ ன வு -மெல்லாம் வழங்கப்பட்டதும், இ ன் று காயல்பட்டினம் எ ன் று அழைக்கப்படுவதுமான இந்நகர் ஏறத்தாழ ஐயாயிரம் ஆ ண் டு -களின் தொன்மையும், பெருமையும், சி ற ப் பு ம் கொண்டது. சங்ககால பாண்டியர்களின் தலைநகரமாக திகழ்ந்த கபாடபுரம் இருந்தஇடத்தில்தான்இன்றுகாயல்பட்டினம்அமைந்திருக்கின்றது கபாடபுரம் தாமிரபரணி ஆறு (பொருனை ஆறு) க ட லோ டு கலக்கும் இடத்தில் இருந்தது என்று தமிழ் இலக்கிய நூ ல் க ள் கூறுகின்றன. திருச்செந்தூருக்கு அ ரு கி ல் ''அலைவாய்'' துறைமுகம் இருந்தது, கபாடபுரம் தான் அலைவாய் நகரமாகும் என்று வரலாற்று நூல்கள் பகர்கின்றன. கிரேக்கர் குறிப்பிடும் ''பெரிப்ளூஸ்'' துறைமுகம் தா ன் அலைவாய் துறைமுகம் என ஆப்ரகாம் பண்டிதர் குறிப்பிடுகிறார். பண்டிதர்ஜவஹர்லால்நேரு தம்முடைய ''டிஸ் கவரி'' ஆஃப் இந்திய'' எ ன் னு ம் நூ லி ல் பாண்டியர் ஆட்சி காலத்தில் மதுரை அதன் தலைநகரமாகவும் காயல்பட்டினம் அதன் துறைமுகமாகவும் திகழ்ந்தது என்று எழுதியுள்ளார்.

இனிய இஸ்லாம் இவ்வூரில் காலூன்றி ஏறத்தாழ 1350 ஆண்டுகள் ஆகிவிட்டன. கி. பி. 642 ஆம் ஆண்டு (ஹிஜ்ரி 21) இஸ்லாத்தின் இரண்டாவது கலிபாவாகிய உமர்(ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் மாலிக் இப்னுதீனார் தலைமையில் இஸ்லாத்தைப் பரப்ப ஒரு குழு கப்பல் மார்க்கமாக கேரளா வந்து சேர்ந்தது. இக்குழு காயல்பட்டினத்தில்க டலோரமாக ஒரு பள்ளியைக் கட்டி இஸ்லாத்தைப் பரப்பியது, என்று கள்ளிக்கோட்டை யூனிவர் -ஸிட்டியைச் சார்ந்த பேராசிரியர் டாக்டர் கபீர் என்பவர் எழுதி யுள்ளார். எனவே காயல்பட்டினத்தில் இஸ்லாமியர்களின் முதல் குடியேற்றம் கி.பி. 642 இல் ஏற்பட்டது என்பதை அறிகின்றோம். இப்பள்ளி முஹிய்யத்தீன் மெட்ரிக்குலேசன் மேல் நிலைப் பள்ளிக்கு சற்று வடகிழக்காக அமைந்துள்ளது. கோசுமறை தர்ஹாவுக்குப் பக்கத்தில் கடற்கரை பள்ளி என்றப் பெயரோடு இருந்தது. இப்பள்ளி சம்பந்தப்பட்ட ஒரு கல்வெட்டு இப்பகுதியில்

கிடைத்தது. இக்கல்வெட்டு காயல்பட்டினம் கடற்கரைப்பள்ளிக்கு நிலமும், மானியமும் பாண்டிய மன்னரால் வழங்கிய செய்தியை விளக்குகிறது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இப்பள்ளியின் இமா-மாகிய செய்யிது அஹ்மது பின் ஷாஷிது இப்னுமுஹம்மது கரீம் மதனி அவர்களின் கல்லறைக் கல்லும் கிடைத்தன. அதில் தேவையான குறிப்புகள் அழியா வண்ணம் இருந்தன.

டாக்டர் கால்டுவெல் திருவைக்குண்டம் அணைக்கட்டு கட்டும்போது கிடைத்த அரபு நாணயங்களில் ஒன்றில் ஹிஜ்ரி 71 (எழுபத்தி ஒன்றாம் ஆண்டு) ஆண்டு என்றும் பொறிக்கப்பட்டிருந்தது என்றும் இந்நாணயங்கள் அக்காலத்தில் காயல்பட்டினத்தில் வாழ்ந்த அரபு முஸ்லிம்கள் கொண்டு வந்த நாணயங்கள் எனவும் எழுதுகிறார்.

**காயல்பட்டினத்தில் இஸ்லாமியர்களின் இரண்டாவது குடியேற்றம் கி. பி. 842இல்** ஏற்பட்டது. எகிப்திலுள்ள கெய்ரோவில் இருந்து [காஹிரா] கி. பி. 842இல் கலீபா ''அல்வாதிக்'' உடையகாலத்தில் எகிப்தில் முஃதஸீலாக் கொள்கையைஏற்றுக்கொள்ளாதவர்க-ளில் சிலர் அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களின் பரம்பரையில் தோன்றிய முஹம்மது கல்ஜீ அவர்களின் தலமையின் கீழ் கப்பல் மார்க்கமாக காயல்பட்டினம் வந்து சேர்ந்தார்கள். முஹம்மது கல்ஜீயும் அவர்களுடன் வந்த நாதாக்களும் காயல்பட்டினத்தில் இரண்டாவது பள்ளியான பெரிய ஜும்ஆ பள்ளியை கி. பி. 843-யில் கட்டினார்கள். இப்பெரியாரும் இப்பள்ளி மையவாடியில் அடங்கிருக்கின்றரர்கள். அம்பலமரைக்காயர் தெரு வழியாக இம்-மையவாடிக்கு நுழையும் வாயிலிருந்து சுமார் 20 அடி தூரத்தில் இவருடைய கல்லரை உள்ளது. இப்பள்ளி மையவாடியில் சுமார் 25000 இறைநேசச் செல்வர்கள் அடங்கியுள்ளார்கள் என்று நாதாக்கள் மூலம் அறிகின்றோம். மஹான்முஹம்மது கல்ஜீயின் பரம்பரையினர் இன்றும் காயல்பட்டினத்தில் வாழ்ந்துவருகிறார்-கள் அவர்கள் அனைவரும் இஸ்லாத்தின் முதல் கலிபாவாகிய அபூபக்கர் சித்திக் (ரலி)அவர்களின் வாரிசாகும். முஹம்மது கல்ஜீ அவர்கள் காலத்தில் காயலின் தென்பகுதி (இஸ்லாமியர் வாழ்ந்த பகுதி) ''காஹிரூர்'' என்றும், ''காஹிரா'' என்றும் அழைக்கப்-பட்டது. நாளடைவில் அது காயல்பட்டினமாக மாறிவிட்டது. பிற்காலத்தில் காயலின் வடபகுதி அதாவது தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும்,

இடத்திற்கு வடக்கே உள்ள பகுதி ''பழைய காயல்'' என்றும் புன்னக்காயல் என்றும் அழைக்கலாயினர், காயல்பட்டினத்தில் மூன்றாவது பழமையான பள்ளி என்று கணிக்கப்படும் கற்புடையார் பள்ளி என்று முஹய்யத்தின் மெட்ரிகுலேசன் மேல்நிலைப் பள்ளிக்கு சற்றுத் தெற்கேஅமைந்துள்ளது. இப்பள்ளியில்கிடைத்த கல்வெட்டு மூலம் கி. பி. 946 இல் வாழ்ந்தவீரபாண்டியமன்னன் அவர்களால் பவித்திர மாணிக்கப்பட்டினமான காஹிரூரில் எட்டடி நெடுந் தெருவில் உள்ள புகழ்பெற்ற சோனக வியாபாரிகளின் தலைவருக்கு சோனவப்பள்ளி பரிபாலனத்துக்காக இறையிான (வரியில்லாத்) நிலம் வழங்கப்பட்ட விபரமும் தெரிகிறது. இக் கல்வெட்டுக் குறிப்பிடும் சோனவப்பள்ளி, அஞ்சு வண்ணம் என்பன பல்சந்த மாலையிலும் இடம் பெற்றுள்ளன.

இவ்வூரில் உள்ள பழமையான தர்ஹாக்களில் காட்டு மொகுதூம் பள்ளி, தர்ஹாவும் ஒன்று மகுதூம் ஒலியுல்லாஹு அவர்கள் ஹிஜ்ரி 446 இல் அரபு நாட்டில் ஹுசைன் (ரலி) அவர்கள் வம்சத்தில் பிறந்து நம் அருமை நாயகம் முஹம்மது ('ஸல்')அவர்களின் உத்தரவின் பேரில் மார்க்கத்தைப் போதிக்க காயல்பட்டினம் வந்தார்கள். அக்கால பாண்டிய மன்னன் அவர்களை கண்ணியப்படுத்தி உள்ளார் காட்டு மொகுதூம் பள்ளி தர்ஹாவில் இரு கல்வெட்டுகள் கிடைத்தன ஒன்றில் காயல்துறை வீரபாண்டியன் பட்டனத்துக்கு அருகில் உள்ளது எனவும், பவித்திர மாணிக்கப்பட்டினமே காயல்பட்டினமாக இருந்தது என்பதையும் தெளிவாக உணர்த்துகிறது. இக்கல்வெட்டு முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தைச்சார்ந்தது இக்கல் வெட்டு கி.பி. 1216யிலிருந்து கி.பி. 1240க்குள் வெட்டப்பட்டது என்று மதுரை தொல்பொருள் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். மற்றொரு கல்வெட்டு உதயமார்த்தாண்ட மன்னனின் ஆட்சியில் கி. பி. 1387 யில் வெட்டப்பட்டது. இக்கல்வெட்டு மூலம் காயல்பட்டினம் முஸ்லீம்களுக்கும் உதயமார்த்தாண்ட மன்னருக்கும் இருந்த நெருக்கமான தொடர்பு தெரியமுடிகிறது காயல்பட்டினம் கீழ்நெய்னார் தெருவில் அடங்கி இருக்கும் கலீபா வலியுல்லாஹ் அவர்களும், முத்துவாப்பா தைக்கா தெரு -வில் அடங்கி இருக்கும் பஸ்லுல்லாஹ் வலி என்ற ஈக்கி அப்பா அவர்களும், ஏர்வாடியில் அடங்கியிருக்கும் ஷஹீது செய்யிது

இபுறாகீம் வலியுல்லாஹவுடன் ஹிஜ்ரி 571 யில் அரபு நாட்டிலி -ருந்து காயல்பட்டினம் வந்து சேர்ந்தார்கள். அதிவீரராமபாண் டியன் மகன் குலசேகரபாண்டியன் பஸலுல்லாஹ் வலியுல்லாஹ் அவர்களை திருநெல்வேலி பகுதிக்கு படை தளபதியாகவும், கலிபா வலியுல்லாஹ் அவர்களை நீதிபதியாகவும் நியமித்ததோடு செய்யிது இபுறாகீம் வலியுல்லாஹ் அவர்களை தம்முடன் மதுரைக்கு அழைத்துச் சென்றார்.

காயல்பட்டினத்தில் இஸ்லாமியர்களின் மூன்றாம் குடியேற்றம் **கி. பி. 1284யில் ஏற்பட்டது.** சுல்தான் ஜமாலுத்தீன் அவர்களின் தலைமையில் கீழ் கி.பி. 1284யில் ஒருகுழு கப்பல் மார்க்கமாக கயல்பட்டினம் வந்து சேர்ந்தது. வரலாற்று வல்லுநர்ரசிதூத்தீன் சுந்தரபாண்டிய மன்னன் கி.பி. 1293 ஆம் ஆண்டில் இறந்தபின் சுல்தான் ஜமாலுத்தீன் சுல்தானாய் மதுரையில் ஆட்சி புரிந்தார் எனக்கூறுகிறார். மார்க்கோபோலா கி.பி. 1288யிலும் 1298யிலும் காயல்பட்டினம் வந்தார் என டாக்டர் கால்டுவெல், ஹென்றியூல் போன்ற சரித்திர ஆய்வாளர்கள் எழுதுகிறார்கள். சுல்தான் ஜமாலுத்தீன் முஹம்மது கல்ஜி கட்டிய பெரிய ஜீம்ஆ பள்ளியை திருத்தி பிரமாண்டமாகக் கட்டினார். இபுனு பதூதா கி.பி.1348ல் காயல்பட்டினம் வந்துள்ளார் இவர் பத்தனில்பார்த்த பள்ளி,பெரிய ஜீம்ஆ பள்ளியே சுல்தான் ஜமாலுத்தீன் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் பரம்பரையில் தோன்றியவர். இவருடைய பரம்பரை யினர் பிரபுக்கள் என்றும் நெய்னார் என்றும் அழைக்கப்படுவர். இவர்களின் பரம்பரையினர் காயல்பட்டினத்தில் பலர் இன்றும் வாழ்கிறார்கள். சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன் இறந்த சில இறைநேசர்களின் மீஸான் கற்கள் பெரிய ஜிம்ஆ பள்ளி மைய வாடியிலும், கோசுமறை தர்ஹா பகுதியிலும் காணப்பட்டன. சிறந்த குத்புகளாக விளங்கிய அப்துல்லா வலியுல்லாஹ் செய்கு மஹ்மூது காஹிரா வலியுல்லாஹ் போன்றோர் இறந்து 1000 வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டன. இவர்களின் அடக்கஸ்தலங்கள் பெரிய ஜீம்ஆ பள்ளியின் வலதுபுறத்தின் மையவாடியின் மதிலி -லிருந்து மேற்கே 10 அடி தூரத்தில் அமைந்திருக்கின்றன. இப்போது அங்கு மீஸான் கற்கள் காணப்படவில்லை. இவர்கள் கலீபா அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் 18-, 19-வது தலை -முறையில் தோன்றியவர்கள்.

இவ்வூரில் சுமார் முப்பது பள்ளிவாயில்கள் இன்று இருக்கி-ன்றன, இவற்றை தவிர பல தைக்காக்களும், இங்குள்ளன அநேகமாக எல்லா பள்ளி வாயில்களும் தைக்காக்களும் வரலாற்று சிறப்புகளும் குறிப்புகளும் இருக்கின்றன. விளக்கம் தேவைப்படு வோர் ''காயல்பட்டினம்'' என்ற நூலை பார்க்கவேண்டியது.

இவ்வூரில் சுமார் நாற்பதாயிரத்துக்கு மேற்பட்ட இறை நேசச் செல்வர்கள் சென்ற 1200 ஆண்டு களுக்கு இடையில் வாழ்ந்து மறைந்துள்ளார்கள். பல வலிமார்களின் பெயர்கள் மட்டும் அறியக் கிடைக்கின்றன. குறிப்பிட்ட சிலரின் சரித்திர குறிப்புகளும் அறியக்கிடைக்கின்றன.

குறிப்பிட்ட சிலரின் பெயர் மட்டும் இங்கு குறிப்பிடுகிறோம் செய்யிது அஹ்மது வலியுல்லாஹ், அப்துல்லா வலியுல்லாஹ், ஷெய்கு மஹ்மூது காஹிரி வலியுல்லாஹ், காட்டு மகுதூம் வலியுல்லாஹ், கலிபா வலியுல்லாஹ், பஸலுல்லா வலியுல்லாஹ் ஷஹீது செய்தஹ்மது வலியுல்லாஹ், ஷெய்கு ஸலாஹுத்தீன் வலியுல்லாஹ், காழி அலாவுத்தீன் வலியுல்லாஹ், நுஸ்கி வலியுல் லாஹ். பெரிய சம்சுத்தீன்வலியுல்லாஹ, சுலைமான் வலியுல்லாஹ் (அவர்களின் ஐந்து மக்களும் வலியுல்லாஹ்க்களே) ஹாபிழ் அமீர் வலியுல்லாஹ உமர் வலியுல்லாஹ், மஹ்மூதுமஜ்தூபு வலியு ல்லாஹ், பெரிய முத்து வாப்பா வலியுல்லாஹ், தைக்கா சாஹிபு வலியுல்லாஹ், லெப்பை அப்பா வலியுல்லாஹ்க்கள் போன்றோ-ர்கள்.

இவ்வூரில் முதன் முதலாக அமைக்கப்பட்ட தெருக்கள் நான்கு அவை நயினார் தெரு, பைக்காரத்தெரு(சதுக்கைத்தெரு) மஹ்தூம் தெரு, மரைக்காயர் தெரு ஆகியவை. பின்னர் பல தெருக்கள் உண்டாயின. இங்கு பெண்களின் போக்குவரத்துக்கு என தனிப்பாதைகள் அமைக்கப்பட்டுள்ளன.பெண்கள் பாதைகளை ஓடைகள் என்றும் முடுக்குகள் என்றும் கூறுவர். பெண்கள் கூடு மிடத்திற்கு 'வெட்டை' என்று பெயர் பெண்கள் சந்தையைக் கொல்லைக்கடை என்பர் கடைகளில் பெண்கள் பண்டங்கள் வாங்குவதற்கு பிரத்தியேக வாசல்கள் உள்ளன அவை

'தொண்டு வாசல்' என்று அழைக்கப்படுகின்றன. வீடுகளின் அமைப்பும் ஓர் அலாதி நான்கு வீடுகள் கொண்ட ஓர் அமைப்பு இதற்குத் 'தொட்டிக்கட்டு' என்று பெயர். ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு முற்றத்து வாசல், திட்டு வாசல் ஒரு தொட்டிக்கட்டு அமைப்புக்கு இரண்டு தலைவாசல்கள். பெண்கள் தொழுவதற்கு ஒவ்வொரு தெருவிலும் பள்ளி வாயில்கள் இருக்கின்றன இவற்றைப் 'பெண்கள் தைக்கா' என்று கூறுவர் இவற்றில் ஆண் இமாமே வந்து தொழ வைக்கிறார் அவர் வருவதற்கு முகப்பில் தனிவாசல் உள்ளது. பின்வாசல் வழியாகப் பெண்கள் வந்து திரைக்குப் பின் அணிவகுத்து நின்று அவரைப் பின்பற்றி தொழுகின்றனர்.

மணமகன் மணமகளின் இல்லத்தில் தங்கி வாழும் வழக்கம் இவ்வூரில் 450 ஆண்டுகளாக நிலவி வருகிறது. மாமியாரின் கொடுமையின் காரணமாக ஊர் மக்களைக் கூட்டி இச்சட்டத்தை காழி அலாவுத்தீன் வலியுல்லாஹ் அவர்கள் கொண்டு வந்தார்கள் இந்த வழக்கம் எந்தெந்த ஊர்களில் இருக்கிறதோ அவர்கள் காழி அலாவுதீன் வலியுல்லாஹ் அவர்களின் காலத்திற்குப்பின் காயல்பட்டினத்திலிருந்து சென்று குடியேறியவர்கள் என்பது புலனாகிறது.

இவ்வூர்ப் பெண்கள் பெரிதும் பர்தா முறையை அனுஷ்டிப்பவர்கள். எனவே இங்குள்ள பழைய வீடுகளில் மறை சன்னல்கள் அமைக்கப்பட்டுள்ளன அவற்றின் கீழ்ப்பகுதியில் பலகைகள் சாய்வாக அடிக்கப்பட்டுள்ளன வீட்டிலுள்ளோர் தெருவில் செல்வோரைப் பார்க்க இயலாவண்ணமும் தெருவில் செல்வோர் வீட்டிலுல்ளோரை பாக்க இயலா வண்ணமும் இவை அமைக்கப் பட்டுள்ளன இத்தகைய வீடுகள் இன்றும் கெய்ரோவில் இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்திற்கு அன்மையில் இருப்பதாக கூறப்படுகிறது.

இவ்வூர் முஸ்லீம்கள் பண்டுதொட்டு மார்க்கபத்தி மிகுந்தவர்கள் இவ்வூரிலுள்ள மஹ்தூம் பள்ளியில் உள்ள அடக்கஸ்தலத்தில் மட்டும் 12,000 இறைநேசச் செல்வர்கள் அடங்கப்பெற்றிருப்பதாகத் தைக்கா சாஹிபு வலியுல்லாஹ் அவர்கள் கூறியுள்ளனர்

பெரிய ஜீம்ஆ பள்ளியில் சுமார் 25,000 இறை நேசச் செல்வர்கள் அடங்க பெற்று இருக்கிறார்கள் என்பதை பெரியோரின்வாயிலாக அறிகிறோம். இதிலிருந்து முற்காலத்தில் இவ்வூரிலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் ஓர் இறை நேசச் செல்வர்கள் வாழ்ந்தனர் என அறியப்படுகிறது.

இவ்வூருக்கு சாகுல் ஹமீது நாயகம் வந்த பொழுது இவ்வூர் மக்கள் அவர்களை மிகவும்கண்ணியப்படுத்தி துஆசெய்யுமாறு வேண்டி நின்றார்கள். அவர்கள் இவ்வூரில் வலிமார்களும் குத்பு மார்களும் தோன்றிக் கொண்டே இருப்பார்கள் என்று வாழ்த்தினார்கள் அதன் காரணமாக இன்று வரை இவ்வூரில் வலிமார் -களும் குத்பு மார்களும் தோன்றிக் கொண்டு இருக்கிறார்கள் என்றும் கூறப்படுகிறது.

இவ்வூரில் உள்ள சின்ன குத்பாப் பள்ளியில் பல ஷீஹதாக் -களின் அடக்கவிடங்கள் வரிசையாகக் இருக்கின்றன இவ்வூர் பண்டுதொட்டு இன்று வரை உலமாக்கள் நிறைந்த ஊராகவும் இருக்கிறது. இன்றும் கூடஇவ்வூரில் சுமார்நூற்றுக்கும் மேற்பட்ட உலமாக்கள் வாழ்ந்து வருகிறார்கள். குர்ஆனை மனனம் செய்த ஹாபிழ்களே சுமார் எழுநூறு பேர் வரை இருக்கிறார்கள்.

தராவிஹ் தொழுகையில் திருக்குர்ஆன் முழுவதையும் சுமார் ஏழு மணி நேரத்தில் தொடர்ந்து ஓதிமுடித்த ஹாபிழ்கள் பலர் இவ்வூரில் இருந்தார்கள் இன்னும்இருக்கின்றார்கள் நாங்கள் நேரில் பார்த்தவர்களில் குறிப்பிட்டத்தக்கவர்கள் மர்ஹூம் அல்ஹாபிழ் அல்ஹாஜ் மௌலான மௌலவி முஹியத்தீன் தம்பி ஆலிம் முஃப்தி (முன்னாள் முதல்வர் மஹ்ழரா அரபிக் கல்லூரி) மர்ஹூம் அல்ஹாஜ் அல்ஹாபிழ் மௌலான மௌலவி ஷாஹூல் ஹமீது ஆலீம் முஃப்தி (முன்னாள் முதல்வர் ஜாவியா அரபிக் கல்லூரி) மர்ஹூம் அல்ஹாஜ் அல்ஹாபிழ் அஜ்வாத் ஆலிம். இப்பொழுது இருப்பவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் அல்ஹாஜ் அல்ஹாபிழ் சேக் அப்துல்காதர் ஆலிம் மிஸ்பாஹி அல்ஹாஜ் அல்ஹாபிழ் முஹம்மது நூஹ் ஆலிம்.

ஹாஜிகளில் ஆண்டுகளிலும், பெண்களிலும் சேர்த்து இவ்
-வூரில் இரண்டு ஆயிரத்துக்கும் அதிகமாணவர்கள் இருக்கின்றனர் அரபுத் தமிழை முதன்முதலாக எழுதத் துவங்கியவர்கள் இவ்வூ
-ரில் தோன்றிய ஹாபிழ். அமீர் வலியுல்லாஹ் அவர்களே ஆவார் அரபுத்தமிழில் ''புதூஹாத்தூர் ரஹ்மாணிய்யா:; என்னும் பெயரில் தப்ஸிர் எழுதிய அஸ்லாமா ஹபீபு முஹம்மது லெப்பை ஆலிம் அவர்களும் ஃபத்ஹில் கரீம் எனும் பெயரில் தப்ஸிர் எழு
-திய அல்லாமா நூஹ் இப்னு அப்துல்காதிர் சாஹிபு அவர்களும் இவ்வூரைச் சேர்ந்தவர்களே.

கண்ணித் தமிழ் காயல்பட்டினம், மெய்ஞான களஞ்சியமாக வும் தமிழ்ப்புலவர் கோட்டையாகவும் விளங்குகிறது. இஸ்லாமி
-யத்தமிழ் இலக்கியங்களில் மிகவும்பழமையானதுபல்சந்த் மாலை இந்நூல் குறிப்பிடும் மன்னர் காயல்பட்டினத்தை ஆட்சி புரிந்து காயல்பட்டினத்தில் உள்ள பெரிய ஜிம்ஆ பள்ளியைக் கட்டிய சுல்தான் ஜமாலுத்தீன் ஆவார். இம்மன்னர் பாண்டிய நாட்டை கி.பி. 1293 ல் இருந்து ஆட்சி செய்ததாக வரலாறு மூலம் அறி கிறோம்.

ஆயிரம் மஸாலா என்று வழங்கும் அதிசய புராணத்தை ஏற்றியவர் இவ்வூரைச் சார்ந்த வண்ண பரிமளப் புலவர் என்ற செய்து இஸ்ஹாக் என்ற புலவர் ஆவார். மேல செல்வலைச் சார்ந்த ஆலிப் புலவர் இயற்றிய மிஃராஜ் மாலைக்கு உரைகொடு
-த்தவரும் காயல்பட்டினத்தைச் சார்ந்த முஹம்மது மரைக்காயர் என்பவரும், காதி அலாவுதீன் வலியுல்லாஹ் அவர்களும் ஆவார் இவ்வூர்வாசியான கவிஞர் ஷாமு ஷிஹாபுதீன் வலியுல்லாஹ அவர்கள் நூறு பாமாலை இயற்றியுள்ளார்கள். அவைகளில் ரசூல் மாலை, அதபுமாலை, பெரிய ஹதீது மாணிக்கமாலை, சின்ன ஹதீது மாணிக்கமாலை ஸீரத்துல் குர்ஆன் மாலை, புத்திமாலை ஆகியவை குறிப்பிட தக்கவை ''சின்ன சீறா'' இயற்றிய பணி அஹ்மது மரைக்காயர் புலவர், வேதப் புராணம் இயற்றிய கவிஞர் நூஹ் வலியுல்லாஹ், திருப்புகழ் இயற்றிய வரகவி காஸிம் வலியுல்லாஹ் திருமணக் காட்சி என்னும் நூலைஇயற்றிய சேகாதி நயினார் புலவர் '' புதூஹ் ஷாம் '' '' காரணப் புராணம் ''

'' திருமணி மாலை '' போன்ற பல நூல்களை இயற்றிய ஷெய்கப்துல் காதிர் என்ற புலவர் நாயகம் வலியுல்லாஹ் போன்றவரும் இவ்வூரில்பிறந்தவர்கள். திரு மெஞ்ஞானப்புலம்பல் இயற்றிய உமர் வலியுல்லாஹ ''நூறு மசாலா'' இயற்றிய கண்ணஹ்மது மகதூம் முகம்மது புலவர், ஷாதுலி நாயகம் காப்பியம் எழுதிய விளக்குமுஹம்மது முஹியத்தீன் லெப்பை ஹாஜியார் புலவர் 'தாய் மகளேசல்' எழுதிய அஹமது நயினார் லெப்பை ஆலிம் புலவர் நபிகள் நாயகம் பெயரில் முஜைஜாத்து எழுதிய ஜெயினுத்தீன் புலவர், போன்றோர்களும் இவ்வூரில் தோன்றியவர்களே உமறுப்புலவருக்கு '*சீறாப்புராணம்*' எழுத உரைதந்தவரும் பரங்கிப் பேட்டையில் அடங்கப் பெற்றவருமான மஹ்மூது தீபி(ரலி)அவர்கள் இவ்வூரில் பிறந்தவரே. மேற்கண்ட புலவர்கள் தவிர வேறு பல புலவர்களும் காயல்பட்டினத்தில் வாழ்ந்து பல இலக்கியங்ககளைப் படைத்துள்ளார்கள்.

இவ்வூரில் வாழ்ந்த சித்தர்கள் தமிழ்வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிந்துள்ளார்கள். இங்கு சித்தர்கள் பெயரால் ஒரு தெருவே இருக்கிறது. ஓவியக் கலையில் வல்லவரான நூஹ் சாஹிபு, கட்டடக் கலையில் வல்லவரான கல்தச்சர் அப்பா ஆகியோர் இவ்வூருக்கும் பெருமை தேடிதந்துள்ளார். வரையாது வழங்கிய சீதக்காதி வள்ளல் இவ்வூரில் பிறந்து கீழக்கரையில் அடங்கபெற்று இருக்கிறார்கள். இவருக்கு பின் பல வள்ளல்கள் இவ்வூரில் தோன்றி மறைந்துள்ளார்கள். இன்றும் சிலர் வாழ்கிறார்கள்.

இவ்வூரில் காதிரிய்யாத் 5 க்காவின் தலைமை பீடமாக மஹ்ழராவும், ஷாதுலிய்யாத் தரிக்காவின் மூல பீடமாக ஜாவியாவும் இருக்கின்றன. இரண்டிலும் அரபி மத்ரஸாக்களும், ஹிப்ழு மத்ரஸாக்களும் இணைக்கப்பட்டு மார்க்க கல்வி நூறு வருடங்களுக்கு மேல் போதிக்கப்பட்டு வருகின்றன. இரண்டிலும் வெள்ளி, திங்கள் ஆகிய நாள்களில் திக்று சிறப்பான முறையில் நடைபெற்று வருகின்றன. இங்கு பயின்ற ஆலிம்களும், ஹாபிழ்களும் உலகின் பல பகுதியிலும் வாழ்கிறார்கள். இங்குள்ள மஜ்லிசுல் புஹாரி ஷரிப்பில் ஒவ்வோர் ஆண்டும் ரஜப் முதல்

நாள் முதல் இறுதி நாள் வரை இமாம் புஹாரி (ரஹ்) அவர்கள் எழுதிய புஹாரி ஷரீப் ஓதப்பட்டு விளக்கம் கூறப்படுகிறது. இறுதி நாள் அன்று இமாம் தஹ்லனி (ரஹ்) அவர்களின் அபூர்வ துஆ ஓதப்பட்டு சிறப்பாக முடிகிறது இதில் வெளியூர் மக்களும் ஏராள மாகத் கலந்து கொள்கின்றனர். இந்த புஹாரி ஷரீபுடன் ஹாமீதிய்யா ஹிப்ழு மதராஸாவும், பைந்து ஸபாவும்இணைக்கப்பட்டு ஜனாப் *I.L.* நூருல் ஹக் ஹாஜியார் அவர்களின் மேற்பார்வையில் நடைபெற்று வருகிறது. அல்ஹாஜ் ஜலீல் முஹியத்தீன் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட அப்துல் ஷகுர் வலியில்லாஹ் குத்பிய்யா மஜ்லிஸுல் குத்பிய்யாதிக்ரு நடைபெறுவதோடு குறிப்பிட்ட சில வலியுல்லாகளின் நினைவு தின துஆ வும் நடை பெற்று வருகின்றன. *T.M.R.* ரஹ்மத்துல்லா ஹாஜி அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட அருஸீல் ஜன்னா பெண்கள் அரபிக் கல்லூரியும் ஹாஜீ *H. A.* அகமது அப்துல் காதர் ஆலிம்ஹாபிழ் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட முஅஸ்கரிய்யா பெண்கள் அரபிக் கல்லூரியும் பெண்களின் மார்க்க கல்விக்கு பெரிதும் துணை புரிகின்றன. உமர் வலியுல்லாஹ், தைக்கா சாஹிபு வலியுல்லாஹ் ஆகியோர்கள் அடங்கியிருக்கும் தைக்காவில் ஒவ்வோர் வாரமும் திக்ரு மஜ்லிசு நடைபெறுகிறது. இதின் அண்மையில் உள்ள மழ்ஹருல் ஆபிதீனில் மாணவர்களுக்கு பைத்தும். மார்க்க கல்வியும் பயிற்று கொடுக்கிறார்கள். பொதுவாக காயல்பட்டினத்தில்உள்ள பள்ளி வாயில்களில் சிறுவர் சிறுமியருக்கு குர்ஆன் மத்ரஸா அமைத்து கற்றுக் கொடுக்கிறார்கள். இப்பள்ளிகளை ஒட்டி அமைந்து இருக்கும் தைக்காக்களில் அடங்கியிருக்கும் இறை நேசச் செல்வர்களுக்கு அவர்களின் நினைவு நாளின் போது கந்தூரிகள் சிறப்பாக நடைபெறுகின்றன.

இவ்வூரில் மாணவர்கள், மாணவியர்கள் உலகக் கல்விக் கற்க சிறந்த மேல்நிலைப் பள்ளிகள் இன்று சில உள்ளன. 1927 ஆம் ஆண்டு மஹ்ழரா அரபிக் கல்லூரியின் நிர்வாகிகளின் சிலர் மஹ்ழராவின் வடபுறத் தோட்டத்தின் மர்ஹூம். அல்ஹாஜ் *N. I.* அப்துல்ஹை ஆலீம் அவர்களின் பொறுப்பில் ஒரு திண் -ணைப் பள்ளியை ஆரம்பித்து நடத்தினார்கள். 1932ஆம்ஆண்டு

வரைமஹ்மூராவின் தோட்டத்தில் நடைபெற்று வந்த தொடக் -கப்பள்ளி சி. மு. க. சேகு முஹ்ம்மது அவர்கள், வே. முஹம்மது முஹியத்தீன் (வே. மு. அய்யா) அம்பலம் அம்பலம் அஹ்மது ஹசன் மற்றும் சில பெரியோர் துணையுடன் 1933 இல் பெரிய ஜும் ஆ பள்ளிக்கு எதிரில் முஸ்லிம் ஸ்கூல் என்ற பெயரில் துவக்கப்பட்டது. அதே ஆண்டில் *N.T.* அப்துல்ஹை ஆலிம் அவர்கள் காஹிரா ஸ்கூல் என்ற பெயரில் கருத்த தம்பி மரைக்காயர் தெருவில் ஆரம்பித்தார்கள். இவர்களுக்கு மர்ஹூம் முசா சாகிபுஆலிம் அவர்கள் துணையாக இருந்தார்கள். பின் இப்பள்ளியை 1943 ஆம் ஆண்டில் *L. K.* லெப்பை தம்பி ஹாஜியாரிடம் ஒப்படைத்தார்கள். இன்று *L. K.* மேல்நிலைப் பள்ளி என்ற பெயரில் மெயின் ரோட்டில் சிறப்பாக இயங்கி வருகிறது. பெரிய பள்ளிக்கு எதிரில் அமைந்திருந்த முஸ்லிம் ஸ்கூல் சில வருடங்கள் கழித்து சதுக்கைத் தெருவில் மாணவர் -களுக்கு சென்டரல் எலிமென்ட்ரி ஸ்கூல் என்ற பெயரிலும் மாணவிகளுக்கு சுபைதா எலிமென்ட்ரி ஸ்கூல் என்ற பெயரிலும் முஸ்லிம் கல்வி சங்கத்தினரால் மர்ஹீம் *M.K.T.* அபூபக்கர் ஹாஜியார் அவர்களின் தலைமையின் கீழ் 1978 வரை நடத் தப்பட்டு வந்தன. 1979க்கு பின் இவ்விரு ஸ்கூல் முறையே சுபைதா உயர்நிலை பள்ளி, சென்டரல் மேல் நிலைப் பள்ளி என்ற பெயரில் வாவு குடும்பத்தினரால் சிறப்பாக நடத்தப்பட்டு வருகின்றன. 1935 ஆம் வருடம் தீவுத் தெருவில் சிறுமியர்களுக்கு ஓர் தொடக்கப்பள்ளி மஹ்ரும் *A.K.* ஷாகுல்ஹமீது ஹாஜியார் மர்ஹூம் *A. K.* முஹம்மதப்துல் காதர், மர்ஹூம் *B. A.* அப்துல் ஹாசன் மர்ஹூம் *A.K.* செய்யதகமது ஹாஜியார் *B.* மஹ்மூது ஹாஜியார் போன்ற பெரியோர்களின் முயற்சியால் துவக்கப் பெற்று இன்று அரசு மகளிர் மேல்நிலைப் பள்ளியாக நடைபெற்று வருகின்றது.

ஆங்கில மொழிவழியில் அரபியுடனும், இஸ்லாமிய மார்க்க கல்வியுடனும் கற்க முஹியத்தீன் மெட்ரிகுலேசன் மேல்நிலைப் பள்ளி ஹாஜி *R. S.* அப்துல் லத்தீபு *M.A.* ஹாஜி *M.M.* உவைஸ் ஹாஜி *W.S.* அபூபக்கர் சித்தீக், ஹாஜி *P. M. A.* முஹம்மது ஹசன் போன்றோர்களால் 1979 ஆம் ஆண்டு துவக்கப்பட்டு

சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இப்பள்ளியின் தற்போதையத் தலைவர் குளம் சாமு ஹாஜியார் இப்பள்ளியின் சிறப்பம்சங்களில் ஒன்று ஹாபிழ் மாணவர்களுக்கு (குர்ஆனை மனனம் செய்தவர்கள்) சலுகைகள் வழங்கி கற்பிக்கின்றார்கள். மர்ஹூம் M. K. S. முஹியித்தீன் இப்ராஹீம் சாகிப் *B. A. B- L.*, (*B. A.* காக்கா அவர்கள்) நம் ஊரில் பலர் கல்லூரிகளில் சேர்ந்து பட்டதாரிகளாக ஆரம்ப காலத்தில் வர வழிகாட்டியாக இருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வூரில் பல சதுக்கைகளும் சங்கங்களும் உள்ளன. அங்கு பத்திரிகைகள் படிப்பதும், பொழுது போக்கிற்காக தாம் கேரம் போர்டு விளையாட்டுகளையும் விளையாடுகிறார்கள். காயல் ஸ்போர்டிங் கிளப் யுனைடெட் ஸ்போட்ஸ் கிளப் போன்ற பெரிய விளையாட்டு அரங்கங்களும், ரெட் ஸ்டார், *Y.U.F*, போன்ற சிறிய விளையாட்டு அரங்கங்களும் இருக்கின்றன.

இவ்வூரில் ஒரு பைத்துல்மால் சபை இளைஞர்களின் முயற்சியால் நடத்தப்பட்டு வருகிறது. இதன் மூலம் ஊரில் உள்ள ஏழை மக்களுக்கு உதவி புரிந்து வருகின்றது. இவ்வூர் மக்கள் உணவு தயாரிப்பதிலும் பரிமாறுவதிலும் (விளம்புவதிலும்) விருந்தாளிகளை உபசரிப்பதிலும் தனி அலாதியானவர்கள். பொதுவாக இவ்வூரில் திருமணங்கள் பள்ளிகளிலும் பள்ளியை ஒட்டிய தைக்காகளிலும் நடைபெறுவது வழக்கம். திருமண விருந்தும் அங்கே நடைபெறும். சில ஆண்டுகளுக்கு முன் ஜலாலியா நிகாஹ் மஜ்லிஸ் என்ற ஒரு கல்யாண மண்டபத்தை இரட்டை குளத்துப்பள்ளி (மீக்காயில் பள்ளி) வளாகத்தில் கட்டியுள்ளார்கள். இங்கு சுமார் 3000 பேர்கள் ஒரே நேரத்தில் குழுமியிருந்து திருமண நிகாஹைப் பார்க்கவும் விருந்து சாப்பிடுவதற்கும் வசதியாக எல்லா அமைப்புகளையும் அமைத்து இருக்கிறார்கள். இவ்வூரில் உள்ள சில பெரியோர்கள் சேர்ந்து காயல் மெடிக்கல் ட்ரஸ்ட் என்ற பெயரில் ஒரு சிறந்த மருத்துவமனையை நடத்தி வருகிறார்கள். சுமார் பத்து ஏக்கர் நிலப்பரப்பளவில் எல்லா நவீன வசதிகளுடனும் தலைசிறந்த மருத்துவ நிபுணர்களை வைத்து மக்களுக்கு பயன்படும் வழியில் *K.M.T.* ஹாஸ்பிட்டலைச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

இவ்வூர் கஃபாவில் ஹஜ்ருள் அஸ்வத் பதிக்கப் பெற்றிருக்கும் மூலைக்கு நேரே வடமேற்குத் திசையில் 280 டிகிரியில் உள்ளது. என்றும் இத்தகு சிறப்பு இந்தியாவிலுள்ள வேறு எந்த ஊருக்கும் கிடையாது என்றும் மக்கள் கூறுகின்றனர்.

இவ்வூர் மக்கள் பண்டுதொட்டு இரத்தின வியாபாரம் தோல் வியாபாரம், இரும்பு வியாபாரம் துணி வியாபாரம் மற்றும் தொழில்களை செய்து வருகின்றனர். இவ்வூரில் ஆடிட்டர்கள், இஞ்ஜீனியர்கள், டாக்டர்கள் மற்றும் பல கலைகளைக் கற்றவர்கள் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் தொழில் புரிந்து வருகிறார்கள்.

மார்க்கத்துறையில் மட்டுமல்லாமல் எல்லாத் துறைகளிலும் மாண்பு கண்ட காயல்பட்டினம், கலங்கரை விளக்கம் காட்டிநின்ற இதன் சரித்திரம் படைத்த துறைமுகம், இந்திய கட்டிட கலைக்கு மெருகுவூட்டும் கலைகட்டிடங்களின் சின்னங்கள் வனப்பூட்டும் மினராக்கள், தூணின்றி நிமிர்ந்து நிற்கும் கட்டிடங்கள்: கல்விக் கண்ணைத் திறந்து நிற்கும் அரபிக் கலாச்சாலைகள், உலக கல்வியை உரிய முறையில் போதிக்கும் உன்னத கல்வி கூடங்கள், வண்ணமிகு பூங்காக்கள் நீண்ட கடற்கரையை தன்னகத்தே கொண்ட இன்றைய காயல்பட்டினம் சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன் சங்க கால தலைநகரமாகிய கபாடபுரமாகவும், சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன் காயல் துறைமுகமாகவும், இஸ்லாமியர்களின் குடியேற்றம் ஏற்பட்ட பின் சென்ற 1300 வருடங்களாக இஸ்லாமிய கலாச்சாரத்திற்கு சிறந்த தலைநகரமாகவும் சிறந்து விளங்குகிறது.



# Muhyiddeen Matriculation Higher Secondary School,

(Recognised by the Government of Tamil Nadu)
(Run by Sayyidna Muhammed Educational Society)

## முஹ்யத்தீன் மெட்ரிக்குலேசன் ஹையர் செகன்டரி ஸ்கூல்,

(அரசு அங்கீகாரம் பெற்றது)

1) தூத்துக்குடி, நெல்லை, குமரி மாவட்டங்களில் முதலாவதாகத் தோன்றிய மெட்ரிக்குலேசன் ஸ்கூல்.
2) சுமார் 12 ஏக்கர் பரப்பளவில் எல்லா வசதிகளுடன் இந்த ஸ்கூல் அமைந்துள்ளது
3) தொடர்ந்து பல ஆண்டுகளாக மெட்ரிக் மற்றும் +2 தேர்வுகளில் மாணவர்கள் 95% to 100% ரிசல்ட் எடுத்துச் சாதனை படைத்து வருகிறார்கள்.
4) வெளியூர் மாணவர்கள் தங்கிக் கல்வி பயில விடுதி வசதி உண்டு.
5) வெளிநாடுகளில் தொழில் புரியும் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை நம்பி விட்டுச் செல்லப் பொருத்தமான ஸ்கூல்,
6) விடுதியில் வெளியூர் மாணவர்கள் VI முதல் XII வரை சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.
7) இங்குப் பயின்ற மாணவர்கள் பலர் வெளிநாடுகளிலும், உள்நாடுகளிலும் உயர்ந்த பதவிகளில் இருக்கின்றார்கள்
8) +1. +2 வகுப்புகளுக்கு அனைத்துக் கோர்ஸ்களும் உள்ளன. கம்ப்யூட்டர் கோர்ஸ் ஏர்கண்டிசன் வசதிகளுடன் கற்பிக்கப்படுகிறது.
9) தென்னகத்தில் ஹாபிழ் மாணவர்கள் உலகக் கல்வி பயிலும் ஒரே ஸ்கூல் இதுவே
10) பொதுவாக மாணவர்கள் சேர்க்கை மே முதல் ஜூன் வரை நடைபெறும், மாணவர்களை சேர்க்க விரும்பும் பெற்றோர்கள் விண்ணப்பப் படிவங்களைப் பெற்று மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளலாம்.

தலைவர் - குளம் ஷாமு ஹாஜியார்.

முதல்வர்,

சேம்ஸன் ஜெல்ராஜ், M.A., M.Com., M.Ed.,

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பரம்பரையினர்களும், அவர்களின் அருமை தோழர் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் பரம்பரையினர் களும், இன்றும் காயல்பட்டினத்தில் பலர் வாழ்ந்து வருகிறார் கள். அவர்களின் சிலரின் ஸில்ஸிலாக்களை (பரம்பரை யினரின் பெயர் பட்டியல்களை) இந்நூலில் இடம்பெறச் செய்துள்ளேன். மர்ஹூம் நஹ்வி அல்ஹாஜ் செய்யிது அஹ்மது ஆலிம் அவர்களின் வீட்டு நூலகத்தில் காயல்பட்டி னத்தில வாழ்ந்த, வாழ்கின்ற பல குடும்பங்களின் (ஸில் ஸிலாக்கள்) பரம்பரை பட்டியல்கள் நிறைந்த நூல்கள் இருந் தன. ஆனால் அவர்கள் மரணமடைந்த பின் ஸில்ஸிலா சம்பந்தப்பட்ட நூல் குறிப்பில் பல கிடைக்கவில்லை. மர்ஹூம் அல்ஹாபிழ் அல்ஹாஜ் மி. செய்யிது முஹம்மது ஆலிம் (ஜாவியா) அவர்களிடமும் பரம்பரை விளக்க பட்டி யல்கள் இருந்ததாக தெரிகிறது. முத்துச்சுடர் ஆசிரியர் அல்ஹாஜ் அல்ஹாபிழ் நாகுதம்பி ஆலிம் அவர்களிடமும் சில ஸில்ஸிலா குறிப்புகள் இருக்கின்றன. அவர்களும் இந் நூலில் இடம்பெற்றுள்ள சில பரம்பரையினர்களின் பெயர் பட்டியல்களைச் சரிபார்த்து தந்தார்கள் என்பதனை நன்றி யுடன் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூலில் இடம்பெற் றுள்ள நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரம்பரை பட்டியல்களிலும், இஸ்லாத்தின் முதல் கலீபா அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் பரம்பரை பட்டிய லிலும், குறிக்கப்பட்டவர்களில் பலர் இறைநேச செல்வர் களாக திகழ்ந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. எனக்கு கிடைத்த ஸில்ஸிலாக்களில் பலவற்றில் கருத்து வேறுபாடு இருப்பதாக தெரியவில்லை. சிலவற்றில் ஒன்று, இரண்டு பெயர்கள் விடுபட்டிருக்கின்றன. மேலும் சிலவற்றை ஒப் பிட்டு பார்க்கும்போது ஒன்று, இரண்டு பெயர்கள் மாற்றமாக வும் தெரிகின்றன. முடிந்தவரை ஆலிம்களைக் கலந்து சரிபார்த்து எழுதியிருக்கிறேன். பிழை எதுவும் இருக்கு மானால் தக்க சான்றுகளுடன் சரியான (ஸில்ஸிலாக்களை) பரம்பரையினர்களின் பெயர் பட்டியல்களை தந்தால் நன்றி யுடன் அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்ள தோதுவாக இருக்கும் என்பதனை தெரிவித்துக் கொள்கிறேன்.

காயல்பட்டினத்தில் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பரம்பரையினர்கள் :

1. செய்யிதுல் அன்பியாயி வல்முர்ஸலீன் செய்யிதனா முஹம்மதின் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 2. பிழ்அத்தர் ரஸூல் பாத்திமத்துல் பத்தூல் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் (செய்யிதுனா அமீருல் முஃமினீன் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்)3. செய்யிதுஹுஸைனின் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், 4. அல்இமாம் செய்யிது ஜெய்னுல் ஆபிதீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், 5. செய்யிது அபூபக்கர் அவர்கள், 6. செய்யிது முஹம்மதுல் முலக்கபு பத்யித்தீன் அவர்கள், 7. செய்யிது அஹ்மது அவர்கள், 8. செய்யிது முஹம்மதுர் ரஷீது அவர்கள், 9. செய்யிது அபூபக்கர் அவர்கள், 10. செய்யிது அப்துர் ரஹ்மான் அவர்கள், 11. செய்யிது ஹுஸைன் அவர்கள். 12, செய்யிது அலி அவர்கள், 13. செய்யிது ஹுஸைன் அவர்கள், 14. செய்யிது அபூபக்கர் அவர்கள், 15. செய்யிது ஸலாஹுத்தீன் அவர்கள், 16. செய்யிது பஹ்ருத்தீன் அவர்கள், 17. செய்யிது சம்சுத்தீன் அவர்கள், 18. செய்யிது நஸ்ருத்தீன் அவர்கள், 19. செய்யிது இயாதுத்தீன் அவர்கள் 20. செய்யிது குத்புத்தீன் அவர்கள், 21. செய்யிது அலாவுத்தீன் அவர்கள், 22. செய்யிது முஹம்மதுல் மிஸ்ரி அவர்கள், 23. மலிக்குல் இஸ்லாம் அஸ்சுல்தான் அஸ்ஸெய்யிது ஜமாலுத்தினுல் காஹிரிய்யி அவர்கள், 24. அஸ்ஸெய்யிது நூருத்தீனுல் காஹிரிய்யி அவர்கள், 25. செய்யிது பஹ்ருத்தீன் அவர்கள். 26. செய்யிது ஹஸன் அவர்கள், 27. செய்யிது அலிய்யி அவர்கள், 28. செய்யிது அஹ்மது நெய்னார் அவர்கள், 29. செய்யிது மஹ்மூது நெய்னார் அவர்கள் 30. செய்யிது அஹ்மது நெய்னார் அவர்கள், 31. செய்யிது மஹ்மூது நெய்னார் அவர்கள், 32. செய்யிது அப்துல் காதிர் நெய்னார் அவர்கள். 33. செய்யிது முஹியித்தீன் நெய்னார் அவர்கள், 34. செய்யிது முஹம்மது நெய்னார் அவர்கள், 35. செய்யிது அப்துர் ரஹ்மான் நெய்னாரில் சூபி அவர்கள், 36. செய்யிது முஹம்மது நெய்னாரில் காதிரி அவர்கள் 37. செய்யிது சுல்தான் ஜமாலுத்தீனில் காதிரி அவர்கள், 38.

செய்யிது முஹம்மது நெய்னாரில் காதிரி அவர்கள், 39. செய்யிது சுல்தான் ஜமாலுத்தீனில் காதிரி அவர்கள். செய்யிது சுல்தான் ஜமாலுத்தீன் வழிவந்த செய்யிது அப்துல் காதிர், செய்து முஹியித்தீன், செய்யிது முஹம்மது போன்றவர்களின் வம்ச வழியினர்.

A. 32, பிரபு. செய்யிது அப்துல் காதிர் 33, பிரபு. செய்யிது மஹ்மூது. 34, பிரபு. மஹ்மூது நெய்னா 35, பிரபு. முஹம்மது செய்கு அப்துல் காதர் 36, பிரபு. மிஸ்கீன் சாகிபு 37, பிரபு. சுல்தான் அப்துல் காதர் 38, பிரபு. மிஸ்கீன் சாகிப் என்ற செய்கு தாவூது. இவர்களின் மக்கள் பிரபு. சுல்தான் அப்துல்காதர், பிரபு. ஜெய்லானி, பிரபு. சேக்னா லெப்பை

B. பிரபு. செய்யிது அஹ்மது. மகன்பிரபு செய்யிது இஸ்மாயில் இவர்களின் மக்கள் செய்யிது முஹம்மது சாலிஹ், பிரபு. ஹபீபு முஹம்மது, பிரபு செய்யிது அஹ்மது நெய்னா, பிரபு. முஹியித்தீன் தம்பி. பிரபு செய்யிது முஹம்மது சாலிஹ் மக்கள் பிரபு இஸ்மாயில், பிரபு அப்துல் காதர். பிரபு ஹபீபு முஹம்மது மக்கள் பிரபு செய்யிது அஹ்மது. பிரபு. செய்யிது இஸ்மாயில், பிரபு செய்யிது அஹ்மது நெய்னா மக்கள் - பிரபு. முஹியித்தீன் சதக்கத்துல்லா, பிரபு முஸ்தபா - பிரபு பாரூக். பிரபு முஹியித்தீன் தம்பி மக்கள் பிரபு மக்தூம் நெய்னா, பிரபு செய்யிது இஸ்மாயில் ஜலாலி, பிரபு முஹம்மது ஈசா, பிரபு சேகு அப்துல் காதர்

C. பிரபு. முஸ்தபா நெய்னா மகன் பிரபு அப்துற்றகுமான் இவர்களின் மக்கள் பிரபு. முஸ்தபா சலீம், பிரபு ஜமால்

D. பிரபு முஸ்தபா நெய்னா அவர்களின் மூத்த சகோதரர் பிரபு. மஹ்மூது நெய்னா, அவர்களின் மக்கள் - பிரபு. முஹம்மது ஹசனார் லெப்பை, பிரபு. ஜெய்னுல் ஆப்தீன், ஆலிம் பிரபு முஹியித்தீன் அப்துல் காதர் பிரபு. மரியம், பிரபு. முஹம்மது பாத்திமா. பிரபு ஜெய்னுல் ஆப்தீன் மக்கள் பிரபு சாமு பிரபு மஹ்மூது நெய்னா, பிரபு சுல்தான் ஜமாலுத்தீன், பிரபு. நூகு நெய்னா, பிரபு முத்து கதீஜா

பிரபு. முஹியித்தீன் அப்துல் காதிர் அவர்களின் மகன் பிரபு. சுல்தான். பிரபு மரியம். அவர்களின் மக்கள் முஹம்மது அலி, சாலிஹ், செய்யிது இஸ்மாயில். பிரபு முஹம்மது பாத்திம்மா. அவர்களின் மக்கள் ஹசன் நெய்னா, மஹ்மூது நெய்னா

E. 1. செய்யிது சுல்தான் ஜமாலுத்தீன் 2. செய்யிது நூருத்தீன் 3. செய்து பஹ்ருத்தீன் 4. செய்யிதுஹசன் 5. செய்யிது அலி 6. செய்யிது அப்துற்றசீது 7. செய்யிது அப்துல் கப்பார் 8. செய்யிது அலாவுத்தீன் 9. செய்யிது அப்துல் காதிர் 10. செய்யிது அபூபக்கர் 11. செய்யிது அலாவுத்தீன் 12. செய்யிது முலக்கபி பஹாவுத்தீன் 13. செய்யிது வாவு நெய்னா 14 செய்யிது வாவு முஹம்மது சுலைமான் 15 செய்யிது வெள்ளைமுஹம்மது இபுறாஹீம். இவர்களின் மக்கள் 16)A செய்து மொகுதூம் 16)B செய்யிது முஹம்மது சுலைமான், மகன் செய்யிது மொகுதூம், மக்கள் 17)A செய்யிது முஹம்மது இப்றாஹீம் 17)B செய்யிது இஸ்மாயில், செய்து முஹம்மது இபுறாஹீம் மகன் 18 செய்யிது மொகுதூம் இவர்களின் மகன் 19 செய்யிது முஹம்மது லெப்பை 1/)B செய்து இஸ்மாயில் அவர்களின் மக்கள் 18 V. S. E. செய்யிது மொகுதூம, மக்கள் இஸ்மாயில், முஹியத்தீன். அப்துல் மலிக், 19 V. S. E. செய்யிது முஹம்மது அலி. மக்கள் ஹபீபு, ரிபாய், V. S. E. முஹம்மது மீராநாச்சி, 16)B செய்யிது முஹம்மது சுலைமான் அவர்களின் வம்சத்தினர் 17 செய்து முஹியித்தின் தம்பி 18 செய்யிது செய்கு சுலைமான், இவர்களின் மகன் 19 செய்யிது V. S S. முஹியித்தின் தம்பி, மக்கள் செய்யிது செய்கு சுலைமான். செய்யிது ஹசன்

## காயல்பட்டினத்தில் குத்புநாயகம் முஹியித்தீன் அப்துல் காதிர் ஜெய்லானி (ரலி) அவர்களின் பரம்பரையினர்கள் :

1. குத்புநாயகம் முஹியித்தீன் அப்துல் காதிர் ஜெய்லானி (ரலி) அவர்கள் 2. செய்யிது அப்துல் அஜீஸ் (ரலி) [6வது மகனார் அவர்கள்] 3. செய்யிது முஹம்மதுஹத்தாத் மௌலானா

(ரலி) அவர்கள் 4. செய்யிது ஷர்புத்தீன் அவர்கள் 5. செய்யிது முஹம்மது சம்சுத்தின் அவர்கள் 6. செய்யிது முஹம்மது ஜைனுத்தின் அவர்கள் 7. செய்யிது வலியுத்தின் அவர்கள் 8. செய்யிது நூருத்தின் அவர்கள் 9. செய்யிது ஹுஸாமுத்தின் அவர்கள் 10. செய்யிது முஹம்மது தர்வேஷ் அவர்கள் 11. செய்யிது ஜெய்னுத்தின் அவர்கள் 12. செய்யிது முஸ்தபா அவர்கள் 13. செய்யிது ஸல்மான் அவர்கள் 14. செய்யிது அலி அவர்கள் 15 செய்யிது அப்துற்றகுமான் அவர்கள் 16. செய்யிது ஜெக்கரிய்யா அவர்கள் 17. செய்யிது அப்துற்றகுமான் அவர்கள் 18. செய்யிது ஹசன் மௌலானா அவர்கள் 19 செய்யிது ஜெக்கரிய்யா மௌலானா அவர்கள் 20. செய்யிது ஹசன் மௌலானா அவர்கள்

## குத்பு நாயகம் முஹியித்தீன் அப்துல் காதர் ஜெய்லானி (ரலி) அவர்களின் வழி வந்த செய்யிது அலி மௌலானா அவர்களின் பரம்பரையினர்கள் :

15. செய்யிது அப்துற்றகுமான் மௌலானா அவர்களின் மக்கள். 16. செய்யிது ஜெக்கரிய்யா மௌலானா, 16. செய்யிது ஹிப்துல் கறீம் மௌலானா. செய்து ஜெக்கரிய்யா மௌலானா அவர்களின் மக்கள் - 17. செய்து அப்துற்றகுமான் மௌலானா இவர்களின் மக்கள் - 18. செய்யிது புகாரி மௌலானா 18. செய்யிது ஹசன் மௌலானா- செய்யிது புகாரி மௌலானா அவர்களின் மகன் 19. செய்யிது லுக்மான் மௌலானா – இவர்களின் மக்கள் - செய்யிது புகாரி மௌலானா, செய்யிது யாக்கூப் மௌலானா, செய்யிது உஜைர் மௌலானா, செய்யிது ஹசன் மௌலானா, செய்யிது அய்யூப் மௌலானா, செய்யிது அஹ்மது மௌலானா, (18) செய்யிது ஹசன் மௌலானா மக்கள் – செய்யிது பாதுல் அசாப் மௌலானா – செய்யிது முஹம்மது முஹியித்தீன் மௌலானா - செய்யிது அப்துற்றகுமான் மௌலானா- செய்யிது ஜெக்கரிய்யா மௌலானா (16) செய்யிது ஹிப்துல் கறீம் மௌலானா மகன் (17) செய்யிது அப்துல் காதர் மௌலானா - இவர்களின் மக்கள் (18) செய்யிது யாசீன்

மௌலானா - செய்யிது ஜெக்கரிய்யா மௌலானா - செய்யிது யாசீன் மௌலானா மக்கள் - செய்யிது ஹிப்துல் கறீம மௌலானா, செய்யிது தீபி மௌலானா, (18) செய்யிது ஜெக்கரிய்யா மௌலானா மக்கள் - செய்யிது அப்துல் காதிர் மௌலானா, செய்யிது ஹசன் மௌலானா, செய்யிது ஹுசைன் மௌலானா, (15) செய்யிது அப்துற்றகுமான் மௌலானா அவர்களின் சகோதரர் செய்யிது அஹ்மது மௌலானா அவர்களின் மகன் (16) செய்யிது மஹ்மூது மௌலானா (17) செய்யிது அஹ்மது மௌலானா (18) செய்யிது யாசீன் மௌலானா (19) செய்யிது அஹ்மது மௌலானா (19) செய்யிது ஸல்மான் மௌலானா- செய்யிது யாசீன் மௌலானா அவர்களின் மகன் (20) செய்யிது அஹ்மது மௌலானா - செய்யிது ஸல்மான் மௌலானா அவர்களின் மக்கள் – செய்யிது அஹ்மது மௌலானா, செய்யிது ஆரிப் மௌலானா, செய்யிது மன்சூர் மௌலானா.

## காயல்பட்டினம் காட்டு மகுதூம் (முஹம்மது என்ற மகுதூம் வலியுல்லாஹ் அவர்களின் பரம்பரையினர்கள்)-

1. அண்ணல் நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 2. பிழ்அத்தர்ரஸீல் பாத்திமா (ரலி) அவர்கள். செய்யிதுனா அலி (ரலி) அவர்கள், 3. இமாம் செய்யிது ஹுசைன் (ரலி) அவர்கள், 4. செய்யிது ஜெய்னுல் ஆப்தீன் (ரலி) அவர்கள, 5. செய்யிது முஹம்மது பாக்கர் (ரலி) அவர்கள், 6. செய்யிது ஜாபர் சாதிக் (ரலி) அவர்கள், 7. செய்யிது முஹம்மது (ரலி) அவர்கள், 8. செய்யிது ஸஈத் ஜலாலுத்தீன் (ரலி) அவர்கள், 9. செய்யிது முஹம்மது கமால் (ரலி) அவர்கள், 10. செய்யிது அபுதாவூது (ரலி) அவர்கள், 11. செய்யிது ஜமால் (ரலி) அவர்கள், 12. செய்யிது அபுல் ஹசன் (ரலி) அவர்கள், 13. செய்யிது இஸ்மாயில் (ரலி) அவர்கள், 14. செய்யிது முஹம்மது நாஸிர் (ரலி) அவர்கள், 15. செய்யிது அபுயூசுபுல் ஜமால் (ரலி) அவர்கள். இவர்களின் மக்கள், 16 A. செய்யிது முஹம்மது (ரலி) அவர்கள், 16b. அப்துல் கபூர் (ரலி) அவர்கள், 16c. அப்துல்லாஹ் (ரலி)

அவர்கள், 16a. செய்யிது முஹம்மது (ரலி) அவர்களின் மக்கள் 17. முஹம்மது என்ற செய்யிது மகுதூம் வலியுல்லாஹ் அவர்கள், 16b. அப்துல் கபூர் (ரலி) அவர்களின் மக்கள் 17 (i) செய்யிது அஹ்மது (ரலி) அவர்கள். இவர்களின் மகன் 18. ஏர்வாடி. செய்யிது இப்ராஹீம் (வலியுல்லாஹ) அவர்கள்,

## காயல்பட்டினம் செய்யிது காழி அலாவுத்தீன் வலியுல்லாஹ் அவர்களின் பரம்பரையினர் :

1. நபிகள் கோமான் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள். 2. பிழ்அத்தர் ரஸூல் பாத்திம்மா (ரலி) அவர்கள் - செய்யிதுனா அலி (ரலி) அவர்கள் 3. செய்யிதுனா ஹூசைன் (ரலி) அவர்கள் 4. செய்யிது ஜெய்னுல் ஆப்தீன் (ரலி) அவர்கள், 5. செய்யிது முகம்மது பாக்கர் (ரலி) அவர்கள், 6. செய்யிது ஜாபர் சாதிக் (ரலி) அவர்கள், 7. செய்யிது மூஸல் காழிம் (ரலி) அவர்கள் 8. செய்யிது இபுறாகீம் (ரலி) அவர்கள், 9. செய்யிது மூஸா (ரலி) அவர்கள், 10. செய்யிது முஹம்மது (ரலி) அவர்கள் 11. செய்யிது மூஸா (ரலி) அவர்கள், 12. செய்யிது ஹூசைன் (ரலி) அவர்கள், 13. செய்யிது அலி (ரலி) அவர்கள். (14) செய்யிது தாபித் (ரலி) அவர்கள், 15) செய்யிது அலி (ரலி) அவர்கள், 16) செய்யிது உதுமான் (ரலி) அவர்கள், 17) செய்யிது மகுதூம் என்ற முஹம்மது சம்சுத்தீன் (ரலி) அவர்கள் (காயல்பட்டினம் மொகுதூம் பள்ளியைக் கட்டியவர்கள) 18) செய்யிது மகுதூம் நூருத்தீன் (ரலி) அவர்கள், 19) செய்யிது ஜமாலுத்தீன் (ரலி) அவர்கள், 20) செய்யிது அலாவுத்தீன் (ரலி) அவர்கள், 21) செய்யிது ஜமாலுத்தீன் (ரலி) அவர்கள், 22) செய்யிது முஹம்மது காழி அலாவுத்தீன் (ரலி) அவர்கள் (அழைக்கும் பெயர்-காழி மகுதூம் செய்யிது அலாவுத்தீன் (ரலி) அவர்கள்) 23) காழி செய்யிது பஹ்ருத்தீன் (ரலி) அவர்கள், 24) காழி செய்யிது ஜெய்னுல் ஆப்தீன் (ரலி) அவர்கள் (காழி அலாவுத்தீன் (ஒலி) அவர்கள் அஹ்மது நெய்னார் பள்ளியை ஒட்டிய காழி அலாவுத்தீன் அப்பா தைக்காவில் அடங்கியுள்ளார்கள்.

